கத்தில் பொருந்தாதகாலம், பெரிது எ - (சிறிதேயாயினும்) பெரிதே ஆம்.

**பொ-ரை.** கூரின்மை முதலிய குற்றங்கள் எவ்வளவு சிறிதுமுடையதல்லாத வாளினது வாயில் இருப்பதுபோலக் கற்பினொழுக்கத்தில் அசையாதிருந்தும் அவ்வொழுக்கத்தினின்று தவறுதலைப் பின் தாம் பெறுவாராணல் தவறுதலைப்பெற்ற மென்மையாகிய மொழிகளையுடைய பெண்டிர் அத் தவறுதலை எவ்வளவு சிறிதும் செய்யாமல் தம்மைக் காத்தகாலம் பெரிதேயாயினும் சிறிதே ஆம். கற்பொழுக்கத்தில் பொருந்தாத காலம் சிறிதேயாயினும் பெரிதே ஆம்.

கற்பினொழுக்கத்தில் தவருதகாலம் பெரிதேயாயினும், சிறிது தவறியபின் இருமைப்பயனையுந் தாராமைபால் சிறிதும், தவறியகாலம் சிறிதேயாயினும் அச் சிறிது பெரிதும் ஆயின. தேற்றேகாரத்தைப்பெரிதென்பதனேடுங் கூட்டுக. வழுக்கு முதனிலைத் தொழிற்பெயர். இழுக்கு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். கூரின்மை முதலிய குற்றங்கள், கூரின்மை, ஒரு பொருளைத் துண்டிக்குந்தோறும் கூர்மழுங்கல், சோணுதல், முறிதலென்பன. தாம் பெறுவராயினன்னும் பழம்பாடத்தைத் தாம்பெறுராயினெனப் புதிதாகப் பாடமாறி உரைப்பாருமுளர். அங்ஙனமாயின் இழுக்கெனைத்துஞ் செய்குருப் பாணிசிறிதேயெனக் கூறவேண்டுவதில்லை யாதலாலும், இழுக்கினைப் பெருருக்குக் கையுருப்பாணி பெரிதென்னல் ஒருவாற்ருலும் இயையாமையாலும் அதுபாடமன்மை அறிக.

Though they are so jealous of their chastity as if they were on the edge of a faultless sword, if they go astray, the long period during which the soft-voiced ones have guarded their chastity is (regarded as) a short one; and the period during which they went astray is (regarded as) a long one. (362)

**363.** எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
யட்டில் புகாதா ளரும்பிணி—யட்டதனை
யுண்டி யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை.

**இ-ள்.** எறி என்று - (கணவன் சற்றடித்தபோது என்னை) வாளால் வீசென்று சொல்லி, எதிர் நிற்பாள் - எதிரில் சலியாமல் நிற்குமியல்பினள், கூற்றம் - (கொண்டவனுக்கு இறுதியைத்தரும்)

யமனும், சிறுகாலை - விடியற்காலத்தில், அட்டில்-மடைப்பள்ளியில், புகாதாள்-(சமையற்றொழில் செய்ய) புகாதவள், அரும்பிணி - (கணவனுக்கு) மருந்தால் தணியாத நோயாம், அட்டதனை - சமைத்த பொருளை, உண்டி - (கணவனுக்கு) உணவாக, உதவாதாள் - இடாமலுண்பவள், இல்வாழ்பேய் - வீட்டில் வசிக்கின்றபேயாம், இம்மூவர் - இத்தன்மையராகிய மூன்று பெண்டிர்களும், கொண்டானை-(தம்மை) கொண்ட கணவனை, கொல்லும் படை - உயிர் வருத்துதற்குரிய ஆயுதமாவர்.

பொ-ரை. கணவன் சற்றடித்தபோது என்னை வாளால் வீசென்று சொல்லி எதிரில் சலியாமல் நிற்கு மியல்பினள் கொண்டவனுக்கு இறுதியை தரும் யமனும்; விடியற்காலத்தில் மடைப்பள்ளியில் சமையற்றொழில் செய்யப் புகாதவள் கணவனுக்கு மருந்தால் தணியாத நோயாய்; சமைத்தபொருளைக் கணவனுக்கு உணவாக இடாமலுண்பவள் வீட்டில் வசிக்கின்றபேயாம்; இத்தன்மையாகிய மூன்று பெண்டிர்களும் தம்மைக்கொண்ட கணவனை உயிர் வருத்தற்குரிய ஆயுதமாவர்.

பேயென்றமையால் உதவாதாளென்பதற்கு உதவாமலுண்பவளென்ப துரைக்கப்பட்டது. கணவன் அரசனுற் கொலையுண்ண வேண்டுமென்னுங் கருத்தால் எறியென்று நிற்பவளைக் கூற்றம் என்றும், காலமறிந்துணவு தராமைபற்றி நோய் நேருமாதலால் அட்டில் புகாதாளை அரும்பிணி என்றும், கணவன் பசியை நோக்காமையால் உண்டியுதவாதாளைப் பேய்என்றும், மரமுதலியவற்றில் வாழும்பேயோடு இப்பேயிடை வேற்றுமை தோன்ற இல்வாழ் என அடைகொடுத்தும், இம்மூவரால் கொண்டவருயிர் துன்புற்று வருந்தலால் அவரைக் கொல்லும் படை என்றுங் கூறினர். சிறுகாலை என்றது கணவன் உணவுகொள்ளுங் காலத்துக்கு முன் சமைக்குந்தொழில் முற்றுங்காலத்தின் முற்பங்கை. மூவரென்பதனீற்றில் முற்றும்மை தொகுத்தலாயிற்று. கொண்டான் பன்மையிடொருமை வந்த பால் வழுவமைதி. கொல்லல் வருத்தல். அட்டில் ஒருசொற்றன்மைத்து. இஃது உருவகவணி.

The wife that faces her husband saying 'Strike' is Death; she who enters not the kitchen betimes is incurable disease; she who serves not to her husband the cooked food is domestic devil: these three are swords to slay their husbands! (363)

**364.** கடியெனக் கேட்டுங் கடியான் வெடிபட
வார்ப்பது கேட்டு மதுதெளியான்—பேர்த்துமோ
ரிற்கொண் டினிதிரூஉ மேமுறுத லென்பவே
கற்கொண் டெறியுந் தவறு.

இ-ள். கடியென - (புலவர் மணத்தை) கடியென்று சொல்ல, கேட்டும் - (அறிவிலான்) கேட்டிருந்தும், கடியான் - (மணத்தை) கடியாதவனாய், வெடிபட - அச்சமுண்டாம்படி, ஆர்ப்பது - (சாப்பறை தொண்டொண்டொடென) ஒலிப்பதை, கேட்டும்-கேட்டிருந்தும், அது தெளியான். அவ் வொலிப் பொருளைத் தெளியாதவனாய், பேர்த்தும் - அவ்விரண்டையுங் கேட்டபின்னும், ஓர் இல்கொண்டு-ஒருமனையாளைப் பெற்று, இனிது இரூஉம் - கவலையிலனாக இருக்கும், ஏமுறுதல் - மயக்கத்தை அடைதல், கல்கொண்டு - தான் ஒரு கல்லைப்பெற்று, எறியும் - (தன்மேல் தானே) எறிந்துகொள்ளும், தவறு - குற்றம், என்ப - என்று சொல்வர் அறிவுடையோர்.

பொ-ரை. புலவர் மணத்தைக் கடியென்று சொல்ல அறிவிலான் கேட்டிருந்தும் மணத்தைக் கடியாதவனாய் அச்சமுண்டாம்படி சாப்பறை தொண்டொண் டொடென ஒலிப்பதைக் கேட்டிருந்தும் அவ்வொலிப்பொருளைத் தெளியாதவனாய் அவ்விரண்டையுங் கேட்ட பின்னும் ஒருமனையாளைப்பெற்றுக் கவலையிலனாக இருக்கும் மயக்கத்தை அடைதல் தான் ஒரு கல்லைப்பெற்றுத் தன்மேல்தானே எறிந்துகொள்ளும் குற்றம் என்று சொல்வர் அறிவுடையோர்.

வெடிபட என்றதினால் ஆர்ப்பதென்பதற்குச் சாப்பறை என்பது வினைமுதலாக வருவிக்கப்பட்டது. ஒலிக்குமொலி தொண் டொண் டொடென்பது யாக்கை நிலையாமையில் - ௩ - ஆம் செய்யுளால் பெறப்பட்டது. ஏமுறுதல் கற்கொண் டெறியுந்தவறுபோலத் தப்பாமல் தனக்கு நாசத்தைத் தருமென்பது.

He hears (that marriage is named) *Shun*, he shuns it not; he hears the fearful sound of the funeral drum, it does not make him wiser; again to take a wife and fondly hope to live a happy life, the wise say, is, as it were, stoning himself. (364)

**365.** தலையே தவமுயன்று வாழ்த லொருவர்க்
கிடையே யினியார்கட் டங்கல்—கடையே
புணராதென் றெண்ணிப் பொருணசையாற் றம்மை
யுணரார்பின் சென்று நிலை.

இ-ள். ஒருவர்க்கு - ஒருவருக்கு, தவம் - தவவொழுக்கத்தில், முயன்று - முயற்சிசெய்யா நின்று, வாழ்தல் - உயிர் வாழ்தல், தலையே - முதன்மையாகிய செய்கையே, இனியார்கண் - தவஞானங்களால் பெரியராயினாரிடத்து, தங்கல் - கூடிவாழ்தல், இடையே - இடையாகிய செய்கையே, புணராது என்று எண்ணி - (பொருள் நம்மிடத்து) சார்தலிலதென்று கருதி, பொருள் நசையால் - பொருளின் விருப்பத்தால், தம்மை - தமது குடிப்பிறப்பு முதலியவற்றை, உணரார்பின் - அறிந்துகொள்ளாத கீழோர்க்குப் பின்னே, சென்று நிலை - போய்நின்று வாழ்தல், கடையே - கடையாகிய செய்கையே.

பொ-ரை. ஒருவருக்குத் தவவொழுக்கத்தில் முயற்சி செய்யா நின்று உயிர்வாழ்தல் முதன்மையாகிய செய்கையே. தவ ஞானங்களால் பெரிய ராயினாரிடத்துக் கூடிவாழ்தல் இடையாகியசெய்கையே. பொருள் நம்மிடத்துச் சார்தலிலதென்று கருதிப் பொருளின் விருப்பத்தால் தமது குடிப்பிறப்பு முதலியவற்றை அறிந்துகொள்ளாத கீழோர்க்குப் பின்னே போய் நின்று வாழ்தல் கடையாகிய செய்கையே.

தம்மையடுத்துக் கேட்டார்க்குப் பிறவிக் கடலி லழுந்தாமல் வீடென்னும் கரையேறுதற்குரிய உறுதிமொழிகளை இனிதுரைத்தல் பற்றி அவரை இனியார் என்றார். ஏ மூன்றும் பிரிநிலை. முயன்று முயலாநின்றென்பதன் திரிபு. தலைமுதலிய மூன்றும் பண்பாகுபெயர். தன்னலாம் பயனாகிய தவமுயன்று வாழ்தலில்லாமையால் இனியார்கட் டங்கல் இடையாயிற்று; இனியார்கண் என்பதற்கு இனிய குணமுஞ் செய்கையுமுடைய மனைவியாரிடத்து எனவுரைத்தலுமாம்; அஃதாவது இல்லறம். தம் பொருளாகுபெயர்.

The best thing for one is to live a devout life; the middle course is to live in the midst of the wise; the worst is to imagine that one is not sufficiently wealthy and, impelled by desire of wealth, to follow the mean ones who would not understand him. (365)

**366.** கல்லாக் கழிப்பர் தலையாயார் நல்லவை
துவ்வாக் கழிப்ப ரிடைகள்—கடைகள்
ளினிதுண்ணே மாரப் பெறேமியா மென்னு
முனிவினாற் கண்பா டிலர்.

இ-ள். தலையாயார் - தலையாயினார், கல்லா - (அறிவு நூல்களை) கற்றறியா நின்று, கழிப்பர் - (தம் வாழ்நாளை) போக்குவார், இடை

கள் - இடையாயினோர், நல்லவை - (தீயவழியில் வாராத) இன்பங்களை, துவ்வா - அநுபவியா நின்று, கழிப்பர் - வாழ்நாள் கழிப்பர், கடை கள் - கடையாயினோர், யாம் - நாம், இனிது - இன்பத்தை, உண்ணேம் - அநுபவித்திலேம், ஆர - குறைவற, பெறேம் என்னும் - பொருள்) பெற்றிலேமென்று கருதும், முனிவினால்-வெறுப்பினால், கண்பாடிலர் - (இரவிலும்) உறங்காது கவல்வார்.

போ-ரை. தலையாயினோர் அறிவு நூல்களைக் கற்றறியா நின்று தம் வாழ்நாள் போக்குவார். இடையாயினோர் தீயவழியில் வாராத இன்பங்களை அநுபவியா நின்று வாழ்நாள் கழிப்பர். கடையாயினோர் நாம் இன்பத்தை அநுபவித்திலேம் குறைவறப் பொருள் பெற்றிலேமென்று கருதும் வெறுப்பினால் இரவிலும் உறங்காது கவல்வார்.

யாம் தனித் தன்மைப் பன்மை. உண்ணுமையின் சிறுமைதோன்ற ஒருமையாக இனிது என்றும், இனி துண்ணுமைக்குக் காரணம் ஆரப்பெறுமையாதலின் அதனை ஈற்றில் வைத்துங் கூறினர். ஆர்தலாவது தாம் தம்மில் முன் குறித்துக்கொண்ட வளவு பொருள் நிரம்பல். கண்பாடில ரென்பதனால் எப்போதும் முனிவுடையாராவரென்பது பெற்றும்.

The best of men spend their time in learning; the middle sort spend their time in the enjoyment of innocent pleasures, the worst, disgusted with their life, saying 'we do not enjoy pleasures, we have not enough (wealth)' lie sleepless. (366)

**367.** செந்நெல்லா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெல்லே யாகி விளைதலா—லந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவு தந்தை யறிவு.

இ-ள். செந்நெல்லால் ஆய - செந்நெல் விதையினால் முளைத்த, செழுமுளை - நல்ல முளைகள், மற்றும் - விளையுங்காலத்தும், அச்செந்நெல்லே ஆகி - அச்செந்நெல்லின் விதைகளே ஆக, விளைதலால் - விளைவதினால், அந்நெல் - அச் செந்நெற்பயிர், வயல் நிறையக் காய்க்கும் - வயல் நிரம்பும்படி கதிர்விடுகின்ற, வளவயல் ஊர - வளப்பமாகிய வயல்களால் சூழப்பட்ட மருத நிலத்துத்தலைவனே, தந்தை அறிவுஏ - பிதாவினறிவே, மகனறிவு-மகனிடத்துண்டாம் அறிவு.

போ-ரை. செந்நெல் விதையினால் முளைத்த நல்ல முளைகள் விளையும் காலத்தும் அச்செந்நெல்லின் விதைகளே ஆக விளைவதி

னால் அச்செந்நெற்பயிர் வயல் நிரம்பும்படி கதிர்விடுகின்ற வளப்ப மாகிய வயல்களால் சூழப்பட்ட மருத நிலத்துத் தலைவனே, பிதாவி னறிவே மகனிடத்துண்டாம் அறிவு.

முளை தொழிலாகு பெயர். ஏ தேற்றம். தந்தையினுடைய இய ற்கை யறிவின் மகனறிவு வேற்றுமைப்படுத லிலதென்பது.

As the red paddy's swelling germ grows up and yields that same red paddy, O Lord of the land full of red paddy fields, the intelligence of the son is but the intelligence of the father. (367)

**368.** உடைப்பெருஞ் செல்வருஞ் சான்றோருங் கெட்டுப்
புடைப்பெண்டிர் மக்களுங் கீழும் பெருகிக்
கடைக்கா றலைக்கண்ண தாகிக் குடைக்கால்போற்
கீழ்மேலாய் நிற்கு முலகு.

இ-ள். உடைய பெருஞ் செல்வரும் - தொன்றுதொட்டு உடை யதாகிய பெருஞ் செல்வத்தினரும், சான்றோரும் - (கல்வியறிவு கேள்விகளால்) நிறைந்த மேலோரும், கெட்டு - வறியராதலாலும், புடைப்பெண்டிர் மக்களும்-வேசையருடைய புத்திரர்களும், கீழும் - கீழ்மக்களும், பெருகி - செல்வத்தின ராதலாலும், குடைக்கால் போல - குடையின் தண்டுபோல, கடைக்கால் - கீழிடத் திருத்தற் குரிய பொருள், தலைக்கண்ணது ஆகி - மேலிடத் திருத்தற்குரிய பொருளாகும்படி, கீழ்மேலாய் நிற்கும் - கீழ்மையுள்ளது மேன்மை யுள்ளதாய் மாறும் இயல்பினது, உலகு - இவ்வுலகு.

போ-ரை. தொன்றுதொட்டு உடையதாகிய பெருஞ் செல் வத்தினரும் கல்வியறிவு கேள்விகளால் நிறைந்த மேலோரும் வறிய ராதலாலும் வேசையருடைய புத்திரர்களும் கீழ்மக்களும் செல்வத் தினராதலாலும் குடையின் தண்டுபோலக் கீழிடத்திருத்தற்குரிய பொருள் மேலிடத் திருத்தற்குரிய பொருளாகும்படி கீழ்மையுள் ளது மேன்மையுள்ளதாய் மாறும் இயல்பினது இவ்வுலகு.

எனவே உலகியற்கை நோக்கிய தமக்குப் பிறந்த அநுதாபத் தால் அதனை எடுத்துக்கூறினா ரென்பதாயிற்று. பெருஞ் செல்வத் துக்கு உடைய என்னும் அடைதந்தமையால் தொன்றுதொட்டு வந்ததென்பது பெற்றும். புடைப்பெண்டிர் பொருள் கொடுப்பார் பக்கல் சாரும் பெண்கள். கெட்டு, பெருகி இரண்டும் காரணப்பொ ருளன ஆய், நிற்குமென்னும் வினைகொண்டன. கடைக்கால்-இடம்; அஃது இடவாகுபெயராய் அவ்விடத்துப் பொருளுக்காயிற்று.

Men of immense wealth and the noble ones have grown poor while the sons of harlots and the base men have grown in wealth ; the world has indeed been turned topsy-turvy with the things that ought to be below occupying the place above, like the umbrella's handle. (368)

**369.** இனியார்த நெஞ்சத்து நோயுரைப்ப வந்நோய்
தணியாத வுள்ள முடையார் - மணிவரன்றி
வீழு மருவி விறன்மலை நன்னாட
வாழ்வின் வரைபாய்த னன்று.

இ-ள். மணிவரன்றி - இரத்தினங்களை வாரிக்கொண்டு, வீழும் அருவி - வீழுமியல்புள்ள அருவி விழுகின்ற, விறல்மலை நல்நாட - வெற்றியமைந்த நல்லகுறிஞ்சி நிலத்தலைவனே, இனியார்-(அகத்தும் புறத்தும்) நல்லாராயினோர், தம் நெஞ்சத்து - (ஏதேனும் ஒரு பொருட் குறையைப்பற்றி) தம் மனத்துத் தோன்றிய, நோய் உரைப்ப-துன் பத்தைச்சொல்ல, அந்நோய் - அத்துன்பத்தை, தணியாத - நீக்குத லில்லாத, உள்ளமுடையார்-வலிய மனமுடைய செல்வர், வாழ்வின்- உயிர்வாழ்தலினும், வரைபாய்தல் - மலைமீதினின்றும் விழுந்திறத் தல், நன்று - நன்மையைத்தருவது.

பொ-ரை. இரத்தினங்களை வாரிக்கொண்டு வீழு மியல்புள்ள அருவி விழுகின்ற வெற்றியமைந்த நல்ல குறிஞ்சி நிலத்தலைவனே ! அகத்தும் புறத்தும் நல்லராயினோர் ஏதேனும் ஒரு பொருட்குறையை ப்பற்றித் தம் மனத்துத்தோன்றிய துன்பத்தைச்சொல்ல அத்துன் பத்தை நீக்குதலில்லாத வலியமனமுடைய செல்வர் உயிர் வாழ்தலி னும் மலைமீதினின்றும் விழுந்திறத்தல் நன்மையைத் தருவது.

அந்நோயைத் தணிக்கவல்லவர் செல்வரே ஆதலாலும், தணி யாத என்ற குறிப்பாலும் உள்ள முடையாரென்றது செல்வரை என்க. தணியாமல் வாழ்தலின் பழிபாவங்கள் பெருகலால் வரை பாய்தல் நன்றாயிற்று.

O Lord of the goodly land of mighty hills, whence torrents flow down sweeping along pearls! To jump down a precipice were better than to live, for men whose mind would not allow them to assuage the pain of the dear ones who tell them of their heart's pain. (369)

370. புதுப்புனலும் பூங்குழையார் நட்பு மிரண்டும்
விதுப்பற நாடின் வேறல்ல - புதுப்புனலு
மாரி யறவே யறுமே யவரன்பும்
வாரி யறவே யறும்.

இ-ள். புதுப்புனலும் - புது நீர்ப்பெருக்கும், பூங்குழையார் நட்பும் - பொலிவாகிய காதணியையணிந்த வேசியரது அன்பும், இரண்டும் - ஆகிய இரண்டும், விதுப்பு அற - (ஒன்றினிடத்தும்) விருப்பமில்லாமல், நாடின்-ஆராய்ந்தால், வேறு அல்ல - (ஒன்றிலொன்று) வேறுபடுவன அல்ல, புதுப்புனலும் - புதுநீர்ப் பெருக்கும், மாரி அறவே அறும்-மழை நீங்கவே நீங்கும், அவர் அன்பும்-அவ் வேசியர் (பிறர்பால்வைத்த) அன்பும், வாரி அறவே அறும் - (பொருளின்) வருவாய் நீங்கவே நீங்கும்.

பொ-ரை. புது நீர்ப்பெருக்கும், பொலிவாகிய காதணியை யணிந்த வேசியரது அன்பும் ஆகிய இரண்டும் ஒன்றினிடத்தும் விருப்பமில்லாமல் ஆராய்ந்தால்ஒன்றிலொன்று வேறுபடுவன அல்ல. புதுநீர்ப்பெருக்கும் மழை நீங்கவே நீங்கும்; அவ் வேசியர் பிறர்பால் வைத்த அன்பும் பொருளின் வருவாய் நீங்கவே நீங்கும்.

இரண்டு பொருளில் ஒன்றினிடத்தில் விருப்பம் வைத்தால் அதன் குற்றந்தோன்றாதாதலால் விதுப்பற என்றும், அவாவச்செய்வதில் ஆடல், பாடல் இரண்டினும் அழகே சிறந்ததாதலால் பூங்குழையார் என்றுங் கூறினர். அறவே என்னும் இரண்டு ஏவும் தேற்றமாகலின் அற்றபின் பெருக்கும், அன்பும் சிறிதும்தோன்றா என்பதாயிற்று. இச் செய்யுளை இங்குவைத்தது இனிவரும் அதிகாரம் இன்னதெனத் தோற்றுவாய் செய்தற்குப்போலும்.

Impartially examined, the freshes and the love of those adorned with beautiful ear-rings differ not; that fails when rains fail, and the love of these fails too when income fails. ()

## Chapter XXXVIII—Harlots.

## 38-ஆம் அதிகாரம்: பொதுமகளிர்.

தமது நலத்தைப் பொருள்கொடுப்பவர் யாவர்க்கும் விற்பதல்லது அதற்காவார் ஆகாதாரிவரென்னும் பாகுபாடில்லாத மகளிரது இயல்பைக் குறித்துக் கூறியதென்க. அவர் ஒருவர்க்கே வாழ்க்

கைப்படாது பொருள்சொரிப்பார் யாவர்க்கும் வாழ்க்கைப்படுதலாற் பொதுமகளி ரெனப்பட்டனர்; 'அவரன்பும் வாரியறவேயறும்' என மேற்றோற்றுவாய் கூறினமையான். அதிகாரமுறைமையு மிதனானே விளங்கும்.

**371.** விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டுந்
துளக்கற நாடின்வே றல்ல—விளக்கொளியு
நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்புங்
கையற்ற கண்ணே யறும்.

இ-ள். விளக்கொளியும்-விளக்கினொளியும், வேசையர் நட்பும் - பொதுமகளிரன்பும், இரண்டும் - இவ்விரண்டும், துளக்கற நாடின்-குற்ற நீங்கவாராயுங்கால், வேறல்ல - வேறாகமாட்டா, விளக்கொளியும் - விளக்கினொளியும், நெய் அற்றகண்ணே-நெய்வற்றிய அப்போழ்தே, அறும் - ஒழியும், அவரன்பும் - பொதுமகளிர் நட்பும், கையற்ற கண்ணே - பொருள் நீங்கிய அப்போழ்தே, அறும் - ஒழியும்.

பொ-ரை. விளக்கினொளியும், பொதுமகளிரன்பும் ஆகிய இவ்விரண்டும் குற்ற நீங்க வாராயுங்கால் வேறாகமாட்டா. விளக்கினொளியும் நெய்வற்றிய வப்போழ்தே ஒழியும். பொதுமகளிர் நட்பும் பொருள் நீங்கிய வப்போழ்தே ஒழியும்.

விளக்கு - முதனிலை திரிந்த தொழிலாகு பெயர். வேசையர் - வடமொழிச்சிதைவு. துளக்கறுதல் ஐயந்திரிபின்மையாதலே. ஐயம் என்றது ஒன்றன்பாலுந் துணிவுதோன்றாமை, திரிபு என்றது ஒன்றனை அதுவோ இதுவோவெனக் கருதல். வேறல்ல என்றார், அவை வெவ்வேறு தன்மையுடைய வல்லவென்பது கருதி; அவ்வொரு தன்மை காரணமுள்வழி காரிய மிருப்பதாந் தன்மை யென்பது. கை யென்பது கைப்பொருளே; அஃது ஆகுபெயர். அறுமென இயற்கையை யுணர்த்தக் கையென்பது நின்றது.

The lamp's light and the harlot's love: these two, closely examined, differ not; the lamp's light fails when the oil is consumed; and the love of the harlot is gone when the wealth is spent. (371.)

**372.** அங்கோட் டகலல்குலாயிழையா ணம்மொடு [டின்
செங்கோடு பாய்துமே யென்றாண்மன்—செங்கோட்
மேற்காண மின்மையான் மேவா தொழிந்தாளே
காற்கானோய் காட்டிக் கலுழ்ந்து.

இ-ள். அங்கோடு அகலல்குல் ஆயிழையாள் - அழகிய பக்க முடைய அகன்ற அல்குலையும் ஆய்ந்த வாபரணங்களையு முடைய பொதுமகள், நம்மொடு - நம்முடன், செங்கோடு பாய்துமே மன் என்றாள்-செம்மையாகிய மலைச்சிகரத்தினின்றும் உடனேறி வீழ்வே மென்று உறுதிமொழி கூறினாள், காண மின்மையால் - கையிற்பண மின்மையான், செங்கோட்டின்மேல் - செம்மையாகிய மலைச்சிகரத் தில்,மேவாது - நம்மொடு சேராமல், கால் கால் நோய் - காலின்கண் வாதநோயினை, காட்டிக்கலுழ்ந்து - காட்டிக்கலங்கிப் புலம்பி, ஒழிந் தாள் - நீங்கினின்றாள்.

பொ-ரை. அழகிய பக்கமுடைய அகன்ற அல்குலையும் ஆய்ந்த வாபரணங்களையுமுடைய பொதுமகள் நம்முடன் செம்மையாகிய மலைச்சிகரத்தினின்றும் உடனேறி வீழ்வேமென் றுறுதிமொழி கூறினாள். கையிற் பணமின்மையால் செம்மையாகிய மலைச்சிகரத் தில் நம்மோடு சேராமல் காலின்கண் வாதநோயினைக்காட்டிக் கலங் கிப் புலம்பி நீங்கினின்றாள்.

பாய்தும்-தும்மீற்றுத் தன்மைப் பன்மை, அதுவே எதிர்காலங் காட்டிநின்றது. காணம் - பொருள்; இதனைக் "கையிலொன்று காணமில்லை" எனப் பிறருங் கூறுதல் காண்க. கால் - ஆகுபெயர். பொருள்கொடுத்து வந்தவழி மலைச்சிகரத்தினின்றும்வீழினு முடன் வீழ்வேமென் றுறுதிமொழி கூறி வந்த அவளே பொருணீங்கிய வழிக் காலிற் கானோயெனக் கூறிப் புலம்பி யொழிதலின் அவர் நட் புக்காணத்தினன்றி வேறன்றென்ப துணர்த்தி நின்றது. கலுழ்தல் என்பது பொய் யழுகைகளை.

The harlot of bewitching b·auty adorned with choice jewels said forsooth she would leap down a steep precipice with me, but since I had no money, on the brow of the precipice, she wept pointing to her rheumatic legs, and parted leaving me alone. (372)

**373.** அங்கண் விசும்பி னமரர் தொழப்படுஞ்
செங்கண்மா லாயினு மாகமற்—றங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்
விடுப்பர்தங் கையாற் றொழுது.

இ-ள். அங்கண் விசும்பின் - அழகிய இடமகன்ற விண்ணுல கத்துள்ள, அமரர் தொழப்படும் - தேவரால் வணங்கப்படும், செங் கண்மால் ஆயினுமாக - தாமரைக் கண்ணனாகிய கரியமாலாயினுமா

குக, தங்கை கொடுப்பது ஒன்று இல்லாரை - தங்கையாற் கொடுக்கப்படும் பொருளொன்றில்லாதாரை, கொய்தளிர் அன்னார் - கொய்தற்குரிய தளிர்போன்ற மேனியையுடைய பொதுமகளிர், தம் கையால்-தமது கையால், தொழுது-கும்பிட்டு, விடுப்பர்-விடுப்பார்கள்.

பொ-ரை. அழகிய இடமகன்ற விண்ணுலகத்துள்ள தேவரால் வணங்கப்படும் தாமரைக்கண்ணனாகிய கரியமாலாயினுமாகுக; தங்கையாற் கொடுக்கப்படும் பொருளொன்றில்லாதாரைக் கொய்தற்குரிய தளிர்போன்ற மேனியையுடைய பொதுமகளிர் தமதுகையாற் கும்பிட்டு விடுப்பார்கள்.

பொதுமகளிர் பொருளொன்றனையே கருதி நட்பாந்தன்மை பெய்துவதல்லது பொருள்கொடாதான் செங்கண்மாலே யாயினுமவனை விழையாரென வுணர்த்தினர். கொய்தளிர்-வினைத்தொகை. ஆக வியங்கோள் வினைமுற்று. செங்கண் என்றதுபுருடவிலக்கணத்தினை யுணர்த்தி நின்றது. ஒன்று - ஆகுபெயர். இல்லார் குறிப்பு வினையாலணையும் பெயர். அமரரென்பது சாகாதாரென்பது; இஃது இலக்கணை. ஆயினு மென்ப துயர்வு சிறப்பும்மை.

Be it the fiery-eyed Vishnu himself whom the gods in the heaven worship, if he has in his hand naught to give, the harlots tender as the buds men cull, will straight dismiss him, bowing with folded hands. (373)

374. ஆணமி னெஞ்சத் தணிநீலக் கண்ணார்க்குக்
காணமி லாதார் கடுவனையர்—காணவே
செக்கூர்ந்து கொண்டாருஞ் செய்த பொருளுடையா
ரக்கார மன்னா ரவர்க்கு.

இ - ள். ஆணமில் நெஞ்சத்து - அன்பு நீங்கிய மனத்தினையுடைய, அணிநீலக்கண்ணார்க்கு - அழகிய நீலமலர்போன்ற கண்ணையுடைய பொதுமகளிர்க்கு, காணமில்லாதார் - பொருளில்லாதார், கடுவனையர் - விடம்போற் கொடியாராவார், காண - ஆராயுமிடத்து, செக்கூர்ந்தாராயினும்-செக்கூர்ந்து பொருளீட்டினாராயினும், செய்த பொருள் உடையார்- ஈட்டியபொருளையுடையார், அவர்க்கு அக்கார மன்னார் - அவர்க்குச் சருக்கரையைப் போன்றினியராவர்.

பொ-ரை. அன்பு நீங்கிய மனத்தினையுடைய அழகிய நீலமலர் போன்ற கண்ணையுடைய பொதுமகளிர்க்குப் பொருளில்லாதார் விடம்போற் கொடியராவர். ஆராயுமிடத்துச் செக்கூர்ந்து பொரு

ளீட்டினாராயினும் ஈட்டிய பொருளையுடையார் அவர்க்குச் சருக்கரை யைப் போன்றினியராவர்.

செய்த பொருளென்றது ஈட்டிய பொருளை. பொது மகளிர் கைப்பொருளே யல்லது குலநல முதலிய வேண்டாரென்பார் செக் கூர்ந்தாராயினும் என்றார். செக்கூர்ந்தார் பொருளுதவிய வழி யக் காரமென்றும், பொருளில்லா வழிக் கடு என்று முவமை முகத்தாற் கூறினார். அக்காரம் - சருக்கரை; இதனை "அக்கார வடிசில்" என் னும் வழக்கானு முணர்க. உம்மை இழிவுசிறப்பு. காரண மென்பத ற்கு மேற்கூறினோம். காண காரண சாரிய மில்லாது வந்த செயவெ னெச்சம். நீல மாகுபெயர். ஆணம் - அன்பு.

To those of loveless hearts whose eyes are like blue water-lilies, those who have no wealth are as poison. But those who have wealth, though they have earned it by turning the oil press, are as sugar to them. (374)

375. பாம்பிற் கொருதலை காட்டி யொருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டு மாங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ளறிவி னார்.

இ-ள். பாம்பிற்கு ஒரு தலை காட்டி- பாம்பினுக்கு ஒரு புறங் காட்டி, ஒருதலை - ஒருபுறம், தேன்படு தெண்கயத்து மீன்காட்டும்- இனிமையாகிய தெண்ணீர்க்கயத்து மீனுக்குக் காட்டும், மலங் கன்ன-விலாங்கு மீனொத்த, செய்கைமகளிர் தோள்சேர்வார்-செய் கையையுடைய பொதுமகளிர் தோளைத் தோய்பவர், விலங்கன்ன வெள்ளறிவினார் - விலங்கினை யொத்த அறிவிலாதார்.

பொ-ரை. பாம்பினுக்கு ஒரு புறங்காட்டி ஒருபுறம் இனிமை யாகிய தெண்ணீர்க்கயத்து மீனுக்குக் காட்டும் விலாங்கு மீனொத்த செய்கையையுடைய பொதுமகளிர் தோளைத் தோய்பவர் விலங் கினை யொத்த அறிவிலாதார்.

வெள்ளறிவு என்புழி வெண்மை யுள்ளீடின்மை யுணர்த்தி நின் றது. தன்னைப் பற்றவரும் பாம்பிற்குத் தலையையும் தனக்குணவாகி வரு மீனுக்கு வாலையுங் காட்டித் தானொன்றானும் பற்றப்படாத நிலையைக் காட்டலால் ஆசையொன்றானே மயக்கும் பொதுமகளிர்க் கதனை யுவமை கூறினார். மீன் காட்டும் என்புழி நான்காம் வேற்று மை யுருபு தொகுத்தல் பெற்றது; 'ஐந்தவித்தானாற்ற' லென்புழிப் போல. ஆங்கு - அசை. வெள்ளறிவு மங்கல வழக்கு.

Those who seek the embraces of women who are like the eel, which shows one head to the snake and another head to the fish in the sweet clear pond, are senseless as beasts. (375)

**376.** பொத்தநூற் கல்லும் புணர்பிரியா வன்றிலும்போ
னித்தலு நம்மைப் பிரியல மென்றுரைத்த [ஞ்சே
பொற்றொடியும் போர்த்தகர்க்கோ டாயினா ணன்னெ
நிற்றியோ போதியோ நீ.

இ-ள். பொத்தநூற் கல்லும் - நூலொடு தொளைத்த மணியும், புணர்பிரியா வன்றிலும்போல் - கூடியிருப்பது நீங்காத அன்றிற் பறவையும் போன்று, நித்தலும் நம்மை பிரியலம்-என்றும் நம்மைப் பிரிதல் செய்யேம், என்றுரைத்த - என்று கூறிய, பொற்றொடியும்-பொன்னாற் செய்யப்பட்ட வளையலையுடைய பொதுமகளும், போர்த் தகர்க்கோடு ஆயினாள்-போர்த்தொழில் செய்யும் யாட்டின் கொம்பு போன்ற குணமுடையளாயினாள், நல் நெஞ்சே - நல்ல மனமே, நீ நிற்றியோ போதியோ-நீ யவள்பால் நிற்கின்றனையோ என்பால் வருகின்றனையோ சொல்.

பொ-ரை. நூலொடு தொளைத்த மணியும் கூடியிருப்பது நீங்காத அன்றிற் பறவையும் போன்று என்றும் நம்மைப் பிரிதல் செய்யேம் என்று கூறிய பொன்னாற் செய்யப்பட்ட வளையலையுடைய பொதுமகளும் போர்த்தொழில் செய்யும் யாட்டின் கொம்புபோன்ற குணமுடையளாயினாள். நல்ல மனமே! நீ யவள்பால் நிற்கின்றனையோ ? என்பால் வருகின்றனையோ ? சொல்.

புணர்பிரியாமை என்றது கூடியிருப்பது நீங்காமையை பொத்துதல் தொளைத்தல். கல்லுமன்றிலு மெண்ணும்மை. நித்தலு மென்ற உம்மை முற்று. நூலுமணியும், ஆண் பெண் அன்றிலும் போல உம்மைப் பிரியேமென் றுவமைமுகத்தாற் கூறியது அவர் சொன்மாத்திரையாற் கூறியதை யுணர்த்தற்கு. பொற்றொடி அன் மொழித்தொகை. போர்த்தகர்க்கோடாயினாள் என்றார், நூற்கல்லு மன்றிலும் போன்றவள் பொருளற்றவழி நீங்கலின் கோட்டினைப் போலுந் திரிந்த குணமுடையளென்ப துணரநிற்றலின். ஓ விரண்டும் வினா. நிற்றி, போதி என்பன நிகழ்காலங் காட்டும் வினை முற்றுகள்.

Even the damsel with golden bracelets who said she would never part (from us) like the gem strung on its thread or th-

*Andril* that connot endure separation, has now bocome the horn of a fighting ram, O my dear heart! would you stay with her or come back to me? (376)

377. ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோற் குப்புறூஉஞ் சில்லைக்க ணன்பினை
யேமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரா னகை.

இ-ள். ஆமாபோல் நக்கி-காட்டுப்பசுப்போல் நக்கி, அவர்கைப் பொருள் கொண்டு - தம்மை யணைந்தார் கைப்பொருள் கவர்ந்து கொண்டு, சேமாபோல் குப்புறும் - எருதைப்போல் குப்புறுகின்ற, சில்லைக்கண் அன்பினை - பரத்தை மாட்டன்பை, ஏமாந் தெமதென் றிருந்தார் - மயக்க மடைந்து எமக்குரிய தென்றிருந்தவர், தாம் - தாம், பலரால் நகைபெறுப - பலராலும் நகைக்கப்படுவர்.

பொ-ரை. காட்டுப் பசுவைப்போல் நக்கித் தம்மை யணைந் தார் கைப்பொருள் கவர்ந்துகொண்டு எருதைப்போல் குப்புறுகின்ற பரத்தை மாட்டன்பை மயக்கமடைந்து எமக்குரியதென் றிருந்த வர் தாம் பலராலு நகைப்படுவர்.

நக்கல் ஈண்டுப்பரிசித்தலை. ஆமா - காட்டுப்பசு. சேமா இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. சில்லை - சிள்வண்டு, சில்லைக் கண் - அன்மொழித்தொகை; வண்டுபோன்ற கண்ணுடையா ளென்பது வண்டு பூவிடைத் தேனிருக்கு மிடந்தோறுஞ் சென்று கவர்ந்து கொண்டு நீங்குதல்போற் காணமுடையாரிடத் தெல்லாஞ் சென்று நாடுங்கண்ணளென்பது குறிப்பாற் காட்டிநின்றது. கண் ணென்ப துண்ணோட்டத்தை. ஏமாவென்பது ஒருசொல், செம்மா முதலியனபோல; இவ்வாறே கூறுவர் பரிமேலழகரும். பெறுப என் பது பலர் பால் வினைமுற்று. ஆமா வின்புற நக்கல்போன்று இவ ளும் ஆலிங்கன முதலியவற்றான் அவர் கைப்பொருளைக் கவர்தலின் ஆமா போ னக்கி என்றுவமை முகத்தாற் கூறினர். ஆம், ஏ: அசை நிலை.

Those who fondly counted upon the love of the harlot who, like the wild ox, licks the hand and despoils men of their wealth, and then like the bull, bounds away, shall be ridiculed by many. (377)

**378.** ஏமாந்த போழ்தி னினியார்போன் றின்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடா—மானோக்கிற்
றந்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்துமென் பார்.

இ - ள். ஏமாந்த போழ்தின் - காமுகர்பாற் கைப்பொருள் கவர்ந்து தாமகிழ்ச்சி யெய்தியபொழுது, இனியார் போன்று - அவர்க் கினியாராய்க் கைப்பொருளறக்கொண்டு, தாம் ஆர்ந்த போதே - தாம்பொருளா னிரம்பியபொழுதே, இன்னாராய் - அவர்க் கின்னாதாராய், தகர்க்கோடாம் - யாட்டின் கோட்டினைப்போன்று திருகுதலை யுடையராகிய, மான் நோக்கின் - மான்போலும் பார்வையினையுடையராய், தம் நெறிப் பெண்டிர் தடமுலை - தமக்குரிய களவின் வழியிற் றப்பாது நிற்கும் பரத்தையர் பெரியமுலையை, செந்நெறிச் சேர்துமென்பார் - செம்மையாகிய வீட்டு நெறியினைச் சேர்வே மென்பார், சேரார்-அடையக் கருதார்.

போ-ரை. காமுகர்பாற் கைப்பொருள் கவர்ந்து தாமகிழ்ச்சி யெய்தியபொழுது அவர்க் கினியராய்க் கைப்பொருளறக்கொண்டு தாம் பொருளா னிரம்பியபொழுதே அவர்க்கின்னாதாராய் யாட்டின் கோட்டினைப்போன்று திருகுதலை யுடையராகிய மான்போலும் பார்வையினையுடையராய்த் தமக்குரிய களவின் வழியிற் றப்பாது நிற்கும் பரத்தையர் பெரிய முலையைச் செம்மையாகிய வீட்டு நெறியினைச் சேர்வே மென்பார் அடையக் கருதார்.

ஆர்தல் - நிறைதல்; காமுகராவார் மயங்கிய வழி அவர் கைப்பொருளைக் கவருஞ் சிந்தையராகலின் ஏமாந்தபோதி னினியராய் என்றார். அவர் தங் கைப்பொருளற் றிவர் நிரம்பியவழி யவர்பால் வெறுப்பெய்துவ ராகலிற் பரத்தையரைத் தகர்கோட்டிற் குவமை கூறினர் தகர்க்கோட்டிற் குவமை கூறல் அது மடவார் அவர் தம்மொடு மாறுபட்டிருத்தலை. சேர்தும் தும்மீற்றுத் தன்மைப் பன்மை, சேர்துமென்பார் தன்மையொடு படர்க்கை வந்த வழுவமைதி. தந்நெறிப் பெண்டிர் - தந்நெறிச் சென்றவழிச் செல்பவர். செந்நெறி என்றது சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய் அந்தமி லின்பத்தழிவில் வீட்டு நெறியை.

Those who say they would walk in the path of righteousness, seek not the embrace of the fawn-eyed damsels who have a way of their own, who are pleasant so long as they are propitiated by gifts, and who, when they have had their fill, are unpleasant like the horn of a fighting ram. (378)

379. ஊஉறுசெய் நெஞ்சந்தம் முள்ளடக்கி யொண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
யெமரென்று கொள்வாருங் கொள்பவே யார்க்குந்
தமரல்லர் தம்முடம்பி னார்.

இ-ள். ஒள்நுதலார் - ஒள்ளிய நெற்றியை யுடையார், ஊஉறு செய் நெஞ்சம் - துன்பத்தைச் செய்யுங் கருத்தை, தம்முள் அடக்கி - தம்முட் புலப்படா தடக்கிக்கொண்டு, தேற - காமுகர் தெளிய, மொழிந்த மொழி கேட்டு - கூறிய சொல்லைச் செவியிற் கேட்டு, தேறி - அதனை யுண்மையாகத் தெளிந்து, எமரென்று கொள்வாரும் - எம்மவரென்று கொள்பவரும், கொள்ப - கொள்ளா நிற்பர், தம் முடம்பினார் - தம்முடம்பினைத் தமக்கே யுரியதாகக் கருது மியல்பினை யுடையார், யார்க்கும் தமரல்லர்-யாவர்க்குஞ் சுற்றத்தா ரல்லர்.

பொ-ரை. ஒள்ளிய நெற்றியையுடையார் துன்பத்தைச் செய்யுங்கருத்தைத் தம்முட் புலப்படா தடக்கிக்கொண்டு காமுகர் தெளியக் கூறிய சொல்லைச் செவியிற் கேட்டு அதனை யுண்மையாகத்தெளிந்து எம்மவரென்று கொள்பவரும் கொள்ளா நிற்பர். தம்முடம்பினைத் தமக்கே யுரியதாகக் கருது மியல்பினையுடையார் யாவர்க்குஞ் சுற்றத்தாரல்லர்.

பரத்தையர் தம்கருத்தைப் பிறர்க்குப் புலப்படாவண்ண மறைத்துத் தேறமொழிந்த மொழி கேட்டுத் தேறி யெமரென்று கொள்வாருங் கொள்வர்,யார்க்குந்தமரல்ல ரக்காரறல்ல ராகலின் தம்முடம்பினார் என்றார். உம்மை இரண்டின் முன்னது முற்று, பின்னது யவர்வு சிறப்பு.

There are men who regard the bright-browed ones as their own, placing confidence in the words uttered, with a view to inspire confidence, by them who conceal evil thoughts within ; these who regard their bodies as their own are relatives to none. (379)

380. உள்ள மொருவ னுழையதா வொண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாந்—தெள்ளி
யறிந்த விடத்து மறியாராம் பாவஞ்
செறிந்த வுடம்பி னவர்.

இ-ள். ஒள் நுதலார் - ஒள்ளிய நெற்றியினை யுடையார், உள்ள மொருவ னுழையதாக-தம் மனம் பிறனொருவனிடத்ததாக, கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம் - களவினா லன்பினை யுடையவரைப் போற் செய்யு மெண்ண மனைத்தும், தெள்ளி யறிந்தவிடத்தும் - ஆராய்ந் தறிந்தபோழ்தும், பாவம் செறிந்த வுடம்பினவ ரறியார் - தீவினைச்செய னிரம்பிய யாக்கையை யுடையார் அறியமாட்டார்.

பொ-ரை. ஒள்ளிய நெற்றியினை யுடையார் தம் மனம் பிறனொருவனிடத்ததாகக் களவினா லன்பினை யுடையவரைப்போற் செய்யு மெண்ண மனைத்தும் ஆராய்ந் தறிந்தபோழ்தும் தீவினைச்செயனிரம்பிய யாக்கையையுடையார் அறியமாட்டார்.

இருமனப் பெண்டிராகலின் உள்ளமொருவ னுழையதா என்றும், அவர் செய்யும் பொய்யன்பா னறியமாட்டாமையிற் கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம் என்றும், பாவஞ் செறிந்த வுடம்பின வராற் காண்பதரிதாகலின் அறியார் என்றுங்கூறினார். கள்ளத்தாற் செய்யுங் கருத்தென்பது பொய்யாகிய முகமனை. கருத்தெல்லாம் ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி. உம்மை சிறப்புணர நின்றது. உழையதாக வென்புழி ஈறு தொகுத்தல் பெற்றது. உள்ள மாகுபெயர். பாவமென்றது தீவினையை. உடம்பினவ ரென்புழி உடம்புடையா ரென்பது மன்றி உடம்பினையுடைய வவரெனக் கொள்ளினு மிழுக்காது.

Even when they clearly come to know about the deceitful intentions of the bright-browed harlot whose mind is fixed on some man, the dupes whose bodies are full of sin do not recognise it. (380)

## Chapter XXXIX—Chaste women.

## 39-ம் அதிகாரம்: கற்புடை மகளிர்.

கற்பாவது கணவன் சொல்வழி நிற்றல்; அது நாண மட மச்சம் பயிர்ப்பு நான்குமுடைமையென்க. மேலதிகாரத்தாற் பொதுமகளிர் நலந்துய்த்தல் வேதநூற் பிரமாண மன்றெனக் கூறி இவ்வதிகாரத்தான் மணஞ் செய்துகொண்ட குலமகளோடில் வாழ்க்கை செய்தல் அறநூற் பிரமாணம் என்பதுணர்த்துகின்றமையின் மேலையதிகாரத் தொடியை புடைமை யுணர்க.

381. அரும்பெறற் கற்பி னயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணு
நறுநுதலா ணன்மைத் துணை.

இ-ள். அரும் பெறல் கற்பின் - அரிய பெறுதலையுடைய கற்பின்கண், அயிராணியன்ன பெரும்பெயர் பெண்டிர் எனினும் - இந்திராணியை யொத்த பெரிய இசையினையுடைய மகளிரேயாயினும், விரும்பி பெறு நசையால் - தன்னை விழைய எண்ணிய ஆசையால், பின் நிற்பார் இன்மையே - தம்பின்னே நின்றிரப்புரை கூறுமாடவரின்மையையே, பேணு நறுநுதலாள் - காக்கு நன்மையாகிய நெற்றியினையுடைய பெண்ணே, நன்மைத்துணை - தன்னைக்கொண்ட கணவனுக்கு விழுமியதோர் துணையாம்.

பொ-ரை. அரிய பெறுதலையுடைய கற்பின்கண் இந்திராணியையொத்த பெரிய இசையினையுடைய மகளிரேயாயினும் தன்னை விழைய எண்ணிய ஆசையால் தம்பின்னே நின்றிரப்புரை கூறு மாடவரின்மையையே காக்கு நன்மையாகிய நெற்றியினையுடைய பெண்ணே தன்னைக்கொண்ட கணவனுக்கு விழுமியதோர் துணையாம்.

இரப்புரை கூறு மாடவ ரின்மையாகக் காத்தலாவது தன்னை யாடையணி முதலியவற்றாற் கோலஞ்செய்து கோடலை. பெறலருமெனக்கொண்டுரைப்பாரு முளர். அரும் பெறலென்பதற் கிவ்வாறே பொருள்கூறினார் பேராசிரியரும் 'அன்னாளரும்பெற லன்னாய்' என்னுந் திருக்கோவையாருக்கென்க. அயிராணியை யுவமை கூறினார் நகுடன் இந்திரனாக வந்து விழைய வந்தழியுஞ் சாபவசத்தனாய்க் கரந்திருந்த இந்திரனையே யன்றி விழையாமையானும் வானவர் மகளிரிற் சிறந்தாளாகலானுமென்க. அவ்விந்திராணியே சூழ்ச்சிகொண்டெழு முனிவர் சுமக்குஞ் சிவிகையினிவர்ந்து வருவனேல் யான் விழைவலென்று கூறி யவன் சிவிகையூர்ந்து வந்துழி முற்சுமக்கு முதுக்குறைவுடைய முற்றத்துறந்த குறுமுனிவனாற் பாந்தளாகெனச் சபிக்கப்பட்டமையாற் றன்னை நாடி நிற்பாரின்மையே யவள் கணவனுக்கு இன்னிலை நிகழ்த்தற்குரிய துணையாக விங்ஙனங் கூறினார். உம்மை சிறப்பு. பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற்றொக்கது.

Though they may be far-famed as Indrani for the rare gift of chastity, that woman of fragrant brow who guards herself without having men following after her, enamoured of her charms, is real help (to her husband). (381)

**382.** குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்.

இ-ள். குடநீரட்டுண்ணு மிடுக்கண்பொழுதும் - ஒரு குடத்து நீரைக் காய்ச்சி யுண்ணும் வறுமைப்பொழுதினும், கடனீரறவுண்ணும் கேளிர்வரினும் - கடனீரை வற்றச்செய்தாலொத்த சுற்றத்தவர் வந்த காலத்தும், கடன் நீர்மை - கடமையாகிய தன்மையை, கையாறு ஆககொள்ளும் - ஒழுக்க நெறியேயாகக் கொள்ளாநிற்கும், மடமொழி மாதர் மனைமாட்சியாள்-மென்மைத் தன்மையையுடைய சொல்லையுடைய பெண்ணே இல்வாழ்க்கைக்குரிய மாட்சிமையினை யுடைய குணமுடையாள்.

பொ-ரை. ஒரு குடத்து நீரைக்காய்ச்சி யுண்ணும் வறுமைப் பொழுதினும் கடனீரை வற்றச்செய்தாலொத்த சுற்றத்தவர் வந்த காலத்தும் கடமையாகிய தன்மையை ஒழுக்கநெறியேயாகக் கொள்ளாநிற்கும் மென்மைத்தன்மையையுடைய சொல்லையுடைய பெண்ணே இல்வாழ்க்கைக்குரிய மாட்சிமையினையுடைய குணமுடையாள்.

மாதர் என்பது குற்றியலுகரவீறு அர்போலி பெற்றது. பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. கையாறுக என்புழியும் விகுதி அகரந்தொகுத்தல் பெற்றது. பொழுது மென்புழி உம்மை இழிவு சிறப்பு. கேளிர் வரினுமென்றது அதன் சிறப்புணாநின்றது. கையாறென்றது ஒழுக்கநெறியை. மடமொழியென்றது குதலைச்சொல்லை. சுற்றத்தவர் பலர்வந்துழியும் தன் கணவ னிடுக் கட்பட்டுழியு முள்ளஞ் சோராது நின்றாளே இன்னிலைக்குரிய ளென்பதாம். கடனீரென்பது அவர் மிகுதியை யுணர்த்திற்று. குடநீரட்டுண்ணு மென்றது தண்டுல மின்றித் தண்ணீரை வெந்நீராக்கிக்கொண் டருந்துதலை.

In straitened circumstances when they have to cook and eat but one pot of water, on occasions when relatives come enough to drain a sea, the soft-voiced one who regards fulfilling her duties as righteous conduct, is the glory of her home.

**383.** நாலாறு மாருய் நனிசிறிதா யெப்புறனு
மேலாறு மேலுறை சோரினு—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழு மாண்கற்பி
னில்லா ளமர்ந்ததே யில்.

இ-ள். நாலாறும் ஆருய் - நாற்றிசையும் வழியேயாகி, நனிசிறிதாய் - மிகச்சிறிதாகி, எப்புறனும் எப்புறத்தும், மேலாறு மேலுறை சோரினும் - ஆகாய வழியால் மழைத்துளி தன் மேற்படினும், மேலாய வல்லாளாய்-மேலாயவறங்களை யாற்றவல்லளாகி, வாழுமூர்-தான் வசிக்கு மூரவர், தன் புகழு ம்-தன்னைப்புகழாநிற்கும், மாண்கற்பின் - மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய, இல்லாளமர்ந்ததேயில் - இல்வாழ்க்கைத் துணையொடு வாழ்வதே மனையெனப்படுவது.

பொ-ரை. நாற்றிசையும் வழியேயாகி மிகச்சிறிதாகி எப்புறத்தும் ஆகாயவழியால் மழைத்துளி தன்மேற்படினும் மேலாய வறங்களை யாற்றவல்லளாகித் தான் வசிக்குமூரவர் தன்னைப் புகழாநிற்கும் மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய இல்வாழ்க்கைத் துணையொடு வாழ்வதே மனை எனப்படுவது.

பிரிநிலை யேகாரத்தா னங்ஙன மாட்சிமைப்பட்ட கற்பின்மை யளோடு வாழ்தல் இடுகொடொக்குமென்பது. நாற்றிசை யென்புழி முற்றும்மைவிகாரத்தாற்றெக்கது. நாலாறென்றது நாற்றிசையினை; அவை கீழ்மேற்றென்வட லென்பனவாம். மேலென்பது மேலிடமாகிய பண்பாகு பெயராயிற்று. மேலென்பது தன்னுடம்பின்மேலென்க. மேலாயவென்றது அறவொழுக்கமாகிய ஒப்புரவு முதலியவற்றை. இச்சிறப்பினை யிங்ஙனமாக விதந்தது அவ்வில்லி னிகழும் வறுமையை யுணர்த்தற்கு. உறை - நீர்த்துளி. மாண்கற்பு பண்புத்தொகை நிலைத்தொடர். மனை வாய்த்தது கொண்டானது தவமாகலின் தற்புகழு மாண்கற்பினில்லா ளமர்ந்ததேயில் என்றார்.

On every side the dwelling is open, it is very small, the rain drips down on her, still she can do noble deeds of virtue; the abode of such a housewife whom the whole village praises for her virtue, is, indeed, a home. (383)

**384.** கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா
ளுட்குடையா ளூர்நா ணியல்பினு—ளுட்கி
யிடனறிந் தூடி யினிதி னுணரு
மடமொழி மாதரான் பெண்.

இ-ள். கட்கினியாள் - கண்ணுக்கினிய தோற்றமுடையாளும், காதலன் காதல் வகை புனைவாள் - கொண்ட கணவன் இச்சையின்படி கோலஞ் செய்பவளும், உட்குடையாள்-ஊருக்கு நாண்கொள்ளு மியல்புடையாளும், ஊர் நாணியல்பினள் - ஊராரைக்கண்டு நாணுங் குணமுடையாளும், உட்கி யிடனறிந்தூடி யினிதுணரும் மாதராள்-காதலனுக்கு அஞ்சிச் செவ்வி யறிந்து பிணங்கி யப் புலவி நீக்குங் குணமுடைய மென்மைத் தன்மையுள்ள மொழி பேசுபவளுமாகிய பெண்ணே, பெண் - பெண்டன்மை யுடையளெனப் படுவாள்.

பொ-ரை. கண்ணுக்கினிய தோற்ற முடையாளும் கொண்ட கணவன் இச்சையின்படி கோலஞ் செய்பவளும் ஊருக்கு நாண்கொள்ளு மியல்புடையாளும் ஊராரைக் கண்டு நாணுங் குணமுடையாளும் காதலனுக்கு அஞ்சிச் செவ்வி யறிந்து பிணங்கி யப் புலவி நீக்குங் குணமுடைய மென்மைத்தன்மையுள்ள மொழி பேசுபவளுமாகிய பெண்ணே, பெண் தன்மையுடையளெனப்படுவாள்.

கணவனைக் கண்டவழி யவன் கண்ணுக்கினிய நோக்குடையளாகத் தோன்றுதல் வேண்டுமாதலின் கட்கினியாள் என்றும், அவனைத் தன் கோலத்தால் விழையச் செய்பவளாதல் வேண்டுமாதலின் காதலன் காதல் வகை புனைவாள் என்றும், பிறர் பேசற் கஞ்சுபவளாயிருத்தல் வேண்டுமாதலின் உட்குடையாள் என்றும், எத்தன்மையராயினும் நாணியிருத்தல் இன்றியமையாக் குணமாதலின் ஊர் நாணியல்பினள் என்றும், கணவன் கருத்துக்கு யாது பிழை நேருமோவென்றஞ்சி யூடியவன் கருணையனையபோதூட னீங்கி விழைபவளே மாதென்பவாதலின் உணருமாதராள் என்றும், அவளே பெண்ணெனப் படுமாதலின் பெண் என்றுங் கூறினர். இனியாளும், புனைவாளும், உட்குடையாளும், இயல்பினளும் உணருமாதராளுமெனப் பெண்ணைப் பலமுறை விதந்து கூறியது அவள் இல்வாழ்க்கை நடத்து மியல்புணர்த்தற்கு. இதனை 'ஊடிப்பெறுகுவங்கொல்லோ' என்னுந் திருக்குறளானு மதற்குப் பரிமேலழகர் கூறிய வுரையானுமறிக.

She is sweet to the eye, adorns herself as her husband pleases; she enforces awe, and modestly keeps at a distance from the village folk; she is submissive, but in fitting place is stern, and again kind; such a woman soft-voiced is a wife.

**385.** எஞ்ஞான்று மெங்கணவ ரெந்தோண்மேற் சேர்ந்
தெழினு, மஞ்ஞான்று கண்டேம்போ னுணுதுமால்—
லெஞ்ஞான்று, மென்னை கெழீஇயினர் கொல்லோ
பொருணசையாற், பன்மார்பு சேர்ந்தொழுகு வார்.

இ-ள். எஞ்ஞான்றும் எங்கணவர் - எமது கணவர் எக்காலத்தும், எந்தோள்மேல் சேர்ந்து எழினும் - எமது தோள்களில்அணைந்தெழுந்தாலும், அஞ்ஞான்று கண்டேம்போல் நாணுதும்-அக்காலத்தில் அவரைக் கண்டதொப்ப நாணங்கொள்கின்றேம்,எஞ்ஞான்றும் பொருணசையால் - எப்பொழுதும் பொருளாசையால், பன்மார்பு சேர்ந்தொழுகுவார் - பலர் மார்பையணைந்து நடக்கும் பரத்தையர், கெழீஇயினர் கொல்லோ - பலரையும் விரும்புமாறு என்னேயோ?

பொ-ரை. எமது கணவர் எக்காலத்தும் எமது தோள்களில் அணைந்தெழுந்தாலும் அக்காலத்தில் அவரைக்கண்டதொப்ப நாணங்கொள்கின்றேம்; எப்பொழுதும் பொருளாசையால் பலர் மார்பையணைந்து நடக்கும் பரத்தையர் பலரையும் விரும்புமாறு என்னேயோ?

தம்மைக் கொண்டவனாகலின் எங்கணவர் என்றும், அவரைக் காண்பொழுதெல்லா மச்சமு நாணமு மீதூர்தலால் அஞ்ஞான்று கண்டேம்போல் நாணுதும் என்றும், பன்மார்புதோயும் பரத்தையரெய்தாமைக் காரணமென்னேயோ வென்பார் என்னை கெழீஇயினர் என்றும், காதல் காரண மிதுவன்றென்பார் பொருணசையால் என்றுங் கூறினர். நாணுதுமென்னுந் தும்மீற்றுத்தன்மை இயல்பினான் எதிர்கால நிகழ்காலங் காட்டினமையான் வழுவமைதியின்பாற்கொள்க. பன்மார்பென்றது பலவாடவரை,

Whenever our husband embraces us we feel a timid shame as if we met him then for the first time; how is it they daily love the embraces of many, the harlots who take to that course because of their love of gain. (385)

**386.** உள்ளத் துணர்வுடையா னோதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்க ணொண்பொரு—டெள்ளிய
வாண்மகன் கையி லயில்வா ளனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம்.

இ-ள். வள்ளன்மை பூண்டான்கணொண் பொருள் - ஈகைத் தன்மை மேற்கொண்டு நடப்பான்கணுள்ள ஒள்ளிய பொருள், உள்ளத்துணர்வுடையா னோதியநூலற்று - மனத்தின்கணல்லறிவுடையான் கற்றுத் தேர்ந்த நூலைப்போன்று விளங்கும், நாணுடையாள் பெற்ற நலம் - (அதுபோல) நாணமுடையவளாகிய குலமகள் அடைந்தவழகு, தெள்ளிய ஆண்மகன் கையி லயில்வா ளனைத்து - உணர்வு

டைய ஆண்டன்மையுடையான் கையிற் பிடித்த கூரிய வாளினை யொக்கும்.

பொ-ரை. ஈகைத்தன்மை மேற்கொண்டு நடப்பான்கணுள்ள ஒள்ளிய பொருள் மனத்தின்கண் நல்லறிவுடையான் கற்றுத்தேர்ந்த நூலைப்போன்று விளங்கும்; அதுபோல நாணமுடையளாகிய குலமகள் அடைந்த வழகு உணர்வுடைய ஆண்டன்மை யுடையான் கையிற் பிடித்த கூரியவாளினை யொக்கும்.

இயல்பாற் கொடைத் தொழின் மேற்கொண் டொழுகுவோன் கைப்பொருள் புகழெய்தலான் ஒண்பொருள் என்றார். கற்றவறிவினையுடையா னோதிய நூற்பொருள் பயன்படுதல்போல இயல்பாக நாணமுடையாள் நலமும் யாவரானும் புகழப்படுதலின் அதனை ஆண்மகன் கையி லயில்வா ளனைத்து என்றார். அரோ அசை. அனைத்தென்பது அத்தனைத்தென்பதன் மரூஉ. வள்ளன்மையென்பதில் மை விகுதிமேல் விகுதி; இவ்வாறு கொள்ளாது வேறு கூறுவாருமுளர். இது எடுத்துக் காட்டுவமை.

As the book which a man of good understanding has read, is the goodly wealth in the hands of a generous-hearted man. As the keen sword in the hand of a clear-souled hero, is the loveliness a chaste woman owns. (386)

357. கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கென்
றொருங்கொப்பக் கொண்டானூ ரா—னொருங்கொவ்
வா, நன்னுதலார்த் தோய்ந்த வரைமார்ப னீராடா
தென்னையுந் தோய வரும்.

இ-ள். ஊரான் - ஊரில் வசிப்பவன், கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப்பதக்கென்றொருங் கொப்பக் கொண்டான் - கரியநிறமுள்ள கொள்ளினையுஞ் செம்மை நிறமுள்ள கொள்ளினையும் தூணிப்பதக்கென்னு முகத்த லளவையால் வாங்கிக்கொண்டனன், ஒருங்கு ஒவ்வாத-அதுபோலு முழுது மொப்பாகாத, நன்னுதலார் - அழகிய நெற்றியையுடைய பரத்தையரை, தோய்ந்த வரைமார்பன் - அனுபவித்த மலைபோலு மார்பினையுடைய கணவன், நீராடாது - நீரிற்றோயாது, என்னையுந் தோயவரும் - என்னையு மணைய வருகின்றனன், இதென்ன புதுமை!

பொ-ரை. ஊரில் வசிப்பவன் கரிய நிறமுள்ள கொள்ளினையும் செம்மை நிறமுள்ள கொள்ளினையும் தூணிப்பதக்கென்னு முகத்தல

ளவையால் வாங்கிக்கொண்டனன், அதுபோலு முழுதுமொப்பாகாத அழகிய நெற்றியையுடைய பரத்தையரை அனுபவித்த மலைபோலு மார்பினையுடைய கணவன் நீரிற் றோயாது என்னையு மணையவருகின் றனன் இதென்ன புதுமை!

நகர் வாழ்க்கைய னல்லனாகலின் ஊரான் என்றும், அவன் பேதைமையால் வாங்குத லியல்பாகலிற் கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப்பதக்கென் றெருங் கொப்பக்கொண்டானும் என்றும், அவன்போலும் பேதைமையாற் பரத்தையர் பலரையு மென்கணவன் தோய்ந்தமையான் நன்னுதலார்த் தோய்ந்தவரை மார்பன் என்றும், நீராற் புனிதமாமென்ப துணர்ந்துந் தானீராடாமலென்னையு மணையவருகின்றனன் என்னையும் புனிதமில்லாளாகக் கருதினனென்பாள் நீராடாதென்னையுந் தோயவரும் என்றும் கூறினாள். இதுவு மேலையணி.

The lord of the village (a boor) has bought, it would appear, black gram and red gram in large quantities (tuni-32 measures, padakku-.6 measures); so, my husband whose chest is broad as a mountain, having associated with the beautiful browed harlots who can never bear comparison with me, unpurified, seeks my society too! (387)

**388.** கொடியவை கூறாதி பாணநீ கூறி
னடிபைய விட்டொதுங்கிச் சென்று—துடியி
னிடக்கண் ணனையம்யா மூரற் கதனால்
வலக்கண் ணனையார்க் குரை.

இ - ள். பாண - பாணனே, கொடியவை கூறாதி - கொடுஞ் சொற்களைக் கூறுதொழி, ஊரற்கு யாம் துடியி னிடக் கண்ணனையம்-தலைவற்கு யாம் உடுக்கையி னிடப்பக்கத்தை யொப்பாவேம், அதனால் நீ கூறின்-அவ்வகையால் நீயாதேனுஞ் சொல்லுமிடத்து, அடிபைய விட்டொதுங்கிச் சென்று-மெல்லென அடியிட்டொதுங்கி யப்பாற்போய், வலக்கண்ணனையார்க்குரை - அதன் வலப்பக்கத்தை யொப்பவராகிய பரத்தையர்க்குக் கூறு.

போ-ரை. பாணனே! கொடுஞ்சொற்களைக் கூறுமலொழி. தலைவற்கு யாம் உடுக்கையி னிடப் பக்கத்தை யொப்பாவேம், அவ்வகையால் நீயாதேனுஞ் சொல்லுமிடத்து மெல்லென அடியிட்டொ

துங்கி யப்பாற்போய் அதன் வலப்பக்கத்தை யொப்பவராகிய பரத்தையர்க்குக் கூறு.

பாணனென்பா னொருவகைச் சாதியான், அவன் தலைவனுக்குந் தலைவிக்குந் தூதுரைப்பவன். துடியி னிட மருங்கு பயன்படுதலும், வலமருங்கு பயன் படாமையும்போல பயன்படாத வெம்மையொழித்துப் பயன்படு மவர்பாலே சென்று கூறென்பாள் துடியினிடக்கண் அனையம்யாம் அதனல்வலக்கணனையார்க்குரை நீயென்று கூறினாள். இது தலைவி தன்றலைமகன் பரத்தையர் பாற்செல்வதைத் தன்பாற்கூற, அதைக்கேட்டு ஆற்றாது நீசொல்லத்தக்கன வீண்டைக்கூறா தொழிந்து ஆண்டே கூறுகவெனல். இடக்கணனையம் வலக்கணனையார் என்பன வுவமை.

Utter not cruel words, O minstrel! If you would utter them, softly draw back your steps and go to utter them to those who are like the tambour's right side; for we are, to the lord of the town, as its left. (388)

389. சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வய லூரன்மீ
தீப்பறக்க நோந்தேனும் யானேமற்—றீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந் தணியகல
நோக்கி யிருந்தேனும் யான்.

இ-ள். சாய் பறிக்க நீர்திகழுந் தண்வயலூரன் மீது -கோரையைப்பறிக்க நீர்விளங்கும் குளிர்ச்சிபொருந்திய வயல் சூழ்ந்த ஊரையுடையனாகிய தலைவன்மேல், ஈ பறக்க நொந்தேனும் யானே - ஈப்பறக்கையில் ஆற்றாது சாலமனம் வருந்தி நின்றேனும் யானே, தீப்பறக்கத்தாக்கி முலைபொருத தண்சாந்தணி யகலம் - தீ வீசப் பரத்தையர் கொங்கைகள் தாக்கிக் கலவிப்போர் செய்த குளிர்ச்சி பொருந்திய சந்தனச் சாந்தை யணிந்த மார்பினை, நோக்கி யிருந்தேனும் யான் - பார்த்திருந்தேனும் யானே.

பொ-ரை. கோரையைப் பறிக்க நீர் விளங்கும் குளிர்ச்சிபொருந்திய வயல் சூழ்ந்த ஊரையுடை-யனாகிய தலைவன்மேல் ஈப்பறக்கையில் ஆற்றாது சால மனம் வருந்தி நின்றேனும் யானே. தீ வீசப் பரத்தையர் கொங்கைகள் தாக்கிக் கலவிப் போர் செய்த குளிர்ச்சி பொருந்திய சந்தனச் சாந்தை யணிந்த மார்பினைப் பார்த்திருந்தேனும் யானே.

சாய் என்பது ஒருவகைப்புல்லின் விசேடம், அது கோரை. ஊரன்என்றது மருதநிலத்தலைவனை. என்னொடு கூடியிருக்குமென்று ஈப்பறக்கக் கண்டாற்று திருந்தேனும், இன்று பரத்தையர் கொங்கை ஞெமுங்கத் தாக்கிப் பொருத சந்தமணிந்த மார்பை விழைவேனும் யானே எனத் தலைவி கூறியவாறு. இதனாற் குலமகளிர் பரத்தையர் சேரியிற்சென்ற தலைவனை நீக்காதிருக்க வேண்டுமென்பது பெறப்பட்டது. மன் மிகுதிப்பொருளது. நொந்தேன் இருந்தேன் என்பன வினையாலணையும் பெயர்கள். உம்மை எண்ணின்கணின்றன. ஏகாரம் - பிரிநிலை.

When a fly alighted on the lord of the town, surrounded by cool paddy fields over which the waters gleam when they pluck off the grass, I am she, forsooth, that felt a pang! I am she again that has lived to see his breast adorned with cool sandal paste, which has been warmly embraced by others (harlots). (389)

390. அரும்பவிழ் தாரினா னெம்மருளு மென்று
பெரும்பொய் யுரையாதி பாண—கரும்பின்
கடைக்கண் ணனையநா மூரற் கதனா
லிடைக்கண் ணனையார்க் குரை.

இ - ள். பாண - பாணனே, அரும்பவிழ் தாரினான் - அரும்புமலரும் மாலையணிந்த தலைவன், எம் அருளும் என்று பெரும்பொய் உரையாதி - எமக்கு இரங்குவனென்று பெரும் பொய்யினைப் பேசாதொழி, ஊரற்குக் கரும்பின் கடைக்கணனையம் நாம் - யாம் தலைவற்குக் கரும்பின் கடைக்கண்ணை யொப்பாவேம், அதனால் இடைக்கண் அனையார்க்குரை - அதனால் இம்மொழியை அக்கரும்பினிடைக்கணனைய பரத்தையர்க்கு நீயே சென்றுரை.

போ-ரை பாணனே! அரும்பு மலரு மாலை யணிந்த தலைவன் எமக்கு இரங்குவனென்று பெரும் பொய்யினைப் பேசாதொழி. யாம் தலைவற்குக் கரும்பின் கடைக்கண்ணை யொப்பாவேம். அதனால் இம் மொழியை அக் கரும்பி னிடைக்கணனைய பரத்தையர்க்கு நீயே சென்றுரை.

எம்மருளு மென்புழி நான்காவது தொகுத்தல் பெற்றது; ஐந்தவித்தானாற்ற லென்புழிப்போல. உரையாதி எதிர்மறை யேவலொ

குமை வினை முற்று. கரும்பின் கடைக்கண் மதுரத்திற் குறைவும் அதனிடைக்கண் மதுரத்தின் மிகுதியு முண்மையின் தம்பா லன் பின்மையு மவர்பால் அன்புண்மையும் உவமைமுகத்தாற் பெறப்பட் டன.

Utter not a gross lie, saying that he who wears a garland of opening buds will favour us, O minstrel! we are, to the lord of the town, like the (sapless) tip of the sugarcane; therefore utter it to those who are like its middle joints. (390)

# Part III.

# ON LOVE.

## மூன்றாவது காமத்துப்பால்.

அறம் இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும், பொருள் இம்மை மறுமையென்னும் இருமையையும், காமமாகிய இன்பம் இம்மை யொன்றனையுமே பயக்கும் ஆதலின் காமத்துப்பாலைப் பிற்கூறப் புகுந்தார்; அஃது அறம்பொரு ளிரண்டன் பிற்கூற வேண்டுமாகலின். தமிழ்நூலார் மாந்தர்க் குறுதிப் பொருளெனக் கொண்டன அறம்பொரு ளின்பங்களேயாம்; அற்றாகலினன்றே தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும் முப்பாலாகக் கூறினார். பாலின் முறைமையு மினிதுவிளங்கும். இனிப் பரிமேலழகரும் "ஈண்டின்பமென்றது ஒருகாலத் தொருபொருளான் ஐம்புலனுகர் தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தை; இச்சிறப்புப் பற்றியே வட நூலுட் போசராசனும் சுவை பலவென்று கூறுவார் கூறுக; யாம் கூறிய தின்பச்சுவை யொன்றனையுமே யென மிகுத்துக் கூறி னான்" என்றனர்.

### Chapter XL—The Characteristics of Love.

### 40-ஆம் அதிகாரம்: காமநுதலியல்.

இவ்வதிகாரம் காமத்தின் பாகுபாட்டைக் கூறுவது.

**391.** முயங்காக்காற் பாயும் பசலைமற் றாடி
யுயங்காக்கா லுப்பின்றாங் காமம்—வயங்கோத
நில்லாத் திரையலைக்கும் நீள்கழித் தண்சேர்ப்ப
புல்லாப் புலப்பதோ ராறு.

இ-ள். வயங்கோதம் - விளங்குகின்ற கடலானது, நில்லா திரையலைக்கும் - நில்லாமல் அலைகளான் மோதும், நீள்கழி தண் சேர்ப்ப - நீண்டகழிகளின் தண்ணியகரையையுடைய அரசனே, முயங்காக்கால் பாயும் பசலை - இருவருங்கூடி யிராவிடத் துடப்பு முழுதும் பசலைபோர்க்கும், ஊடி யுயங்காக்கால் - புலந்து வருந்தா

விடத்து, காமம் உப்பு இன்றும் - இன்பம் உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவையாக்கற்கு வேண்டுமளவிற்றாகாது, புல்லா புலப்பது ஓராறு - புணர்ந்தேநின் றூடுவது இக்காமநோய்க் கோர் நன்னெறியாம்.

பொ-ரை. விளங்குகின்ற கடலானது நில்லாமல் அலைகளான் மோதும் நீண்ட கழிகளின் தண்ணிய கரையையுடைய அரசனே! இருவருங்கூடி யிராவிடத் துடம்பு முழுதும் பசலைபோர்க்கும்; புலந்து வருந்தாவிடத்து இன்பம் உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவையாக்கற்கு வேண்டுமளவிற்றாகாது; புணர்ந்தே நின்றூடுவது இக்காமநோய்க் கோர் நன்னெறியாம்.

உப்பு துய்க்கப்படுவனவற்றைச் சுவையாக்குதல் போலப் புலவி நிகழாவிடத் தின்ப மெய்தமாட்டாமையின் உயங்காக்கா லுப்பின்றாங் காமம் எனவும், புல்லாப்புலப்பதோராறு எனவும், அவ்வாறூடிக் கூடியவழிப் பருவரலெய்து மாகலின் முயங்காக்கால் பாயும் பசலை எனவுங் கூறினர். ஊடல், புலவி என்பன ஒருபொருட்கிளவி. அஃது இருவகைத்து: துனி, புலவியெனை; துனி யென்பது பெருங்கலாம், புலவி யென்பது சிறு கலாம். இத்துனியும் புலவியுங் காமத்திற்கின்பமாகலின் " துனியும் புலவியு மில்லாயிற் காமங் - கனியுங் கருக்காயுமற்று" என்றார். காம முப்பின்றென்பது மாடுகோடு கூரிது என்பதுபோன்ற வழுவமைதி. தலைமகன் புலவி நீங்கக் கூறியது.

If there be no embrace, a sickly hue will spread over the body, but if there be no lovers' quarrels, love will lack its zest; O Lord of the cool shore of the sea where the restless billows beat! To embrace and disagree is the way of love. ()

**392.** தம்மமர் காதலர் தார்சூ ழணியகலம்
விம்ம முயங்குந் துணையில்லார்க்—கிம்மெனப்
பெய்ய வெழிலி முழங்குந் திசையெல்லா
நெய்த லறைந்தன்ன நீர்த்து.

இ-ள். தம்மமர் காதலர் தார் சூழ் அணியகலம் - தம்மாற் காதலிக்கப்படுந் தலைவருடைய மாலையணிந்த வழகிய மார்பினை, விம்மமுயங்கும் துணையிலார்க்கு - பூரிக்கத் தழுவுந் தலைவராகிய துணைமையில்லாதார்க்கு, இம்மெனப் பெய்ய எழிலிமுழங்குந்திசை

யெல்லாம்-இம்மென்னு மோசையுடன் மேகம் மழை பொழிய முழங்குகின்ற திசையனைத்தும், நெய்த லறைந்தாலன்ன நீர்த்து - சாப்பறை யறைந்தாற்போலுந் தன்மையினை யுடைத்து.

பொ-ரை. தம்மாற் காதலிக்கப்படுந் தலைவருடைய மாலையணிந்த வழகிய மார்பினைப் பூரிக்கத் தழுவுந் தலைவராகிய துணைமை யில்லாதார்க்கு இம்மென்னு மோசையுடன் மேகம் மழைபொழிய முழங்குகின்ற திசையனைத்தும் சாப்பறை யறைந்தாற்போலுந் தன்மையினை யுடைத்து.

கணவனைப் பிரிந்த மாதர் கார்காலம் வந்துழிக் கணவனை நீங்கி யுய்யாராகலானும், முகிலோசை கேட்டாங்குப் பருவரலா னுயிர்நீப்பாராகலானு நெய்த லறைந்தன்ன நீர்த்து என் றுவமைமுகத்தாற் கூறினார். இதுவுமேலைத்துறை. அறைந்தன்ன என்புழி ஈறு தொகுத்தல் பெற்றது, 'எண்ணிக்கொண்டற்று' என்புழிப்போல. இம்மென ஒலிக்குறிப்பு. நெய்தலென்றது சாப்பறையை.

To those who are lovely, separated from their beloved whose breast girt with garlands they would hold in close embrace, it is as though through all the quarters where the muttering of the thunder is heard from out the clouds, the funeral drum sounded. (392)

**393.** கம்மஞ்செய் மாக்கள் கருவி யொடுக்கிய
மம்மர்கொண் மாலை மலராய்ந்து பூத்தொடுப்பாள்
கைம்மாலை யிட்டுக் கலுழ்ந்தா டுணையில்லார்க்
கிம்மாலை யென்செய்வ தென்று.

இ-ள். கம்மம்செய் மாக்கள் கருவி யொடுக்கிய மம்மர் கொள் மாலை - கம்மியர் தத்தங்கருவிகளைத் தொழிற்படுத் தொடுக்கிய மயக்கங்கொண்ட மாலைக்காலத்தில், மலராய்ந்து பூத்தொடுப்பாள் - பூக்களை யாராய்ந்து மாலையாகத் தொடுப்பாள், கைமாலையிட்டு-கையகத்து மலர்மாலையை வைத்துக்கொண்டு, துணை யில்லார்க்கு-தலைவரைப் பிரிந்த மடவார்க்கு, இம்மாலை யென் செய்வதென்று கலுழ்ந்தாள் - இம்மாலை யாது பயன்படுங்கொல்லோ வென்று கலக்கங்கொண்டழுதாள்.

பொ-ரை. கம்மியர் தத்தங் கருவிகளைத் தொழிற்படுத் தொடுக்கியமயக்கங்கொண்ட மாலைக்காலத்திற் பூக்களை யாராய்ந்து மாலை

யாகத் தொடுப்பாள், கையகத்து மலர் மாலையை வைத்துக்கொண்டு தலைவரைப் பிரிந்தமடவார்க்கு இம்மாலை யாதுபயன் படுங்கொல்லோவென்று கலக்கங்கொண்டழுதாள்.

பகற்பொழுதெல்லா மலரெடுத்தாய்ந்து மாலையாகத் தொடுக்குந்தொழிலின் முயன்றாளாகலின் மலராய்ந்து பூத்தொடுப்பாள் என்றும், தலைவன் வரும்வருமென்றிருந்தவழி யவன் வாராவழி யம்மாலை பயன்படாமையான் துணையில்லார்க் கிம்மாலை யென்செய்வதென்று கலுழ்ந்தாள் என்றும், இஃதுங் கார்ப்பருவமன்ன தகைத்தாகலின் மம்மர் கொள்மாலை என்றும், இடைவிடாது தொழிலாற்றுங் கம்மியருந்தத்தந் தொழில்விட் டொழிப்பராகலின் கம்மஞ்செய்மாக்கள் கருவியொடுக்கியவென்றுங் கூறினர். இது தலைமகன் செல்ல வுடன்படாமையைத் தலைவற்குப் பாங்கியுரைத்தது.

In the bewildering evening, when the workmen lay by their several tools, she would cull flowers and weave a garland; but as she held the wreath in her hand, she said, 'of what use is this to a woman who is alone!' and wept bitterly. (339)

391. செல்சுடர் நோக்கிச் சிதரரிக்கண் கொண்டநீர்
மெல்விரலூழ் தெறியா விம்மித்தன் - மெல்விரலி
னாள்வைத்து நங்குற்ற மெண்ணுங்கொ லந்தோதன்
றோள்வைத் தணைமேற் கிடந்து.

இ-ள். செல்சுடர் நோக்கி - மேலைக்கடல் புகச்செல்கின்ற ஞாயிற்றைக்கண்டு, சிதரரி கண் கொண்டநீர் - சிதறிய செவ்வரி பரந்த கண்களிற்கொண்ட நீரை, மெல்விரல் ஊழ்தெறியா - மென்மையாகிய விரல்களால் முறையினெடுத்து வீசி, தன் மெல் விரலில் நாள் வைத்து - தன் மென்மையாகிய விரல்களால் நாளைக் கணக்கிட்டு, விம்மி - விம்மாநின்று, தன்தோள் அணைமேல் வைத்து - தலைவி தன்றோளை யணையாகவைத்து, கிடந்து நங்குற்றமெண்ணுங் கொல் அந்தோ - படுத்து ஐயோ நம் பிழையையெண்ணுமோவென்று பாகனொடு கூறினான்.

பொ-ரை. மேலைக்கடல் புகச்செல்கின்ற ஞாயிற்றைக்கண்டு சிதறிய செவ்வரிபரந்த கண்களிற் கொண்ட நீரை மென்மையாகிய விரல்களான் முறையினெடுத்து வீசித் தம் மென்மையாகிய விரல்களால் நாளைக் கணக்கிட்டு விம்மாநின்று தலைவி தன் றோளை யணையாக வைத்துப் படுத்து ஐயோ நம் பிழையை யெண்ணுமோவென்று பாகனொடு கூறினான்.

